1. <u>பாரதியார் போற்றும் புதுமைப் பெண்ணின் குணங்களை எடுத்துரைக்க.</u>

**அறியாமை அகற்றும் ஒளியாக:**

- அறிவு பெற்ற மனித உயிர்களை அடிமையாக்க முயல்பவர்கள் பித்தர்கள். நெறிகள் யாவினும் மேலோங்கி வாழ வேண்டும்.
- மானிடர்கள் நேர்மை கொண்ட செயல்களைச் செய்வதோடு, உயர்ந்த நிலைக்கு மேலோங்கி அறிவியல் வளர்வதற்கு சிறிய தொண்டுகள் புரிய வேண்டும்.
- பெண்ணின் அடிமைத் தளையைத் தீயிலிட்டு பொசுக்கி, ஆணும் பெண்ணும் ஒன்றெனக் கருதும் மனப்பான்மையை வளர்க்க வேண்டும். இவ்வாறு செய்தால் இவ்வுலகம் அறிவில் ஓங்கி தழைக்கும்.
- நாணமும் அச்சமும் மட நாய்கட்கு வேண்டும். ஞானமும் நல்லறமும் வீர சுதந்திரமும் நற்குடிப் பெண்களின் நற்குணங்களாகும்.
- பெண்களுக்கு விடுதலை உண்டு என்று கூறும் புதுமைப் பெண்ணின் சொல்லானது நாரதரின் வீணையின்பமாகும். கண்ணனின் வேய்ங்குழல் இன்பமாகும்.
- வேதமே பொன்னுருவாக பெண் ஆகி மேன்மை செய்து எம்மைக் காத்திட வந்திருப்பவள். அப்பெண்னே மானிட சமுதாயத்திற்கு காதலையும் அன்பையும் கொடுக்கும் அமிழ்தம் ஆவாள்.

**புதுமைப்பெண்ணின் சிறப்புகள்:**

- நற்குலத்தில் பிறந்த பெண்களுக்கு கற்பு இயல்பானதாகும். பெண்களின் அறிவை அழித்து அவள் நலத்தை காக்க விரும்புதல் தீமையாகும்.
- புதுமைப் பெண்ணின் சொற்களும் செய்கையும் பொய்மை கொண்ட கலியுகத்து புதுமையாகும். ஆனால் நான்கு வேத முறைப்படி மனிதர்கள் தொன்று தொட்டு வாழ்ந்து வரும் வழக்கமாகும்.
- இனிய மொழி பேசும் பெண்கள் உண்மையை ஆராயும் பெரியோருடன் ஒப்புற இருந்து வந்தனர்.
- நிமிர்ந்த நன்னடையும்; நேர் கொண்ட பார்வையும்; நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்; முதிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால் செம்மையான என்றும் தன்நிலை மாறுவதில்லை.
- அறியாமை எனும் பெரிய இருளில் கவலையின்றி வாழ்வதை பெண்கள் அறவே வெறுத்து தள்ளுதல் வேண்டும்.

2. <u>பாரதிதாசன் 'பேரன்பு கொண்டவரே என்ற கவிதையில் வெளிப்படுத்தும் புரட்சிக் கருத்துக்களை விளக்கி எழுதுக?(10)</u>

**தொழிலாளர்களின் சிறப்பு:**

- நீரோடைகள் நிலத்தைக் கிழித்து செல்லவும், நெடுமரங்கள் மிகுந்து காடாக வளரவும் அங்கே பெரு விலங்குகள் சுதந்திரமாக ஓடி, ஆடி மகிழ்வுடன் வாழ்ந்திருக்க வகை செய்தவர்கள் தொழிலாளர்கள்.
- பருக்கை கற்களாகிய நெடுங்குன்றங்களையும், பாழ்நிலத்தை அந்நாளில் அழுகு நகர் உண்டாக்க பாடுபட்டவர்கள் தொழிலாளர்கள்.
- சிற்றூர்களும், வரப்புடன் கூடிய வயல்களும், ஆற்று நீரைத் தேக்கி வயல்களுக்குக் கொண்டு செல்லும் வாய்க்கால்களையும் உருவாக்கியவர்கள் தொழிலாளர்கள்.
- நிலத்தை உழுது நெற்ப்பயிர்களை நன்கு பயிரிட்டு மிகு பயன் விளைவித்த தோள்கள் தொழிலாளர்களின் தோள்களாகும்.
- கல்லைப் பிளந்து மலையைப் பிளந்து சுரங்கங்கள் வெட்டி பல்வகைக் கருவிகளையெல்லாம் செய்து கொடுத்த கைகள் தொழிலாளர்களின் கைகளாகும்.
- கடலின் உள்ளே மூழ்கி முத்தையும் உயர்ந்த மாணிக்கத்தையும் எடுக்க அடக்கிய மூச்சு தொழிலாளர்களின் மூச்சாகும்.

- உலகில் இருந்த இருட்டைப் போக்கி அழகியதாக ஒளியுடன் செய்து தந்தவர்கள் தொழிலாளர்கள் ஆவர்.

<u>அரசனுக்கும் உதாரனுக்கும் உள்ள வழக்கு:</u>

- அரசனுக்கும் உதாரனுக்கும் ஒரு வழக்கு உண்டாயிற்று. அவ்வழக்கை பொது மக்களே தீர்ப்பதே சரியானது என உதாரன் எண்ணினான். ஆனால் அரசன் ஏற்கவில்லை. எனவே உதாரன் பொதுமக்கள் முன்னிலையில் தன் வழக்கை கூறலானான்.
- அரசன் தன் மகளுக்கு கவிதை சொல்லிக் கொடுக்க என்னை ஆழைத்தான், அவ்வாறு கவிதை கற்றுத் தரும் போது அவள் என்னைக் காதலித்தால், நானும் ஏற்றுக் கொண்டேன்.
- நான் என் உயிர் போவதற்காக அழவில்லை. அழகிய எழுதாத சித்திரம் போல் இருக்கும் அமுதவல்லியின் உடல் வெட்டப்படும், அந்த மாபழி தமிழுக்கு வந்து சேருமே என்று எண்ணியே அழுகிறேன்.
- அரசனுக்கு பின் இந்த தூய நாட்டை ஆளுதற்கு பிறந்த ஒரு பெண்ணை கொல்லக் கூடிய அதிகாரம் அரசனுக்கா? உங்களுக்கா? எனக் உதாரன் மக்களிடம் கேட்டான். இதுவே அரசனுக்கும் உதாரனுக்கும் உள்ள வழக்காகும்.

<u>அமுதவல்லியையும், உதாரனையும் மக்கள் மீட்டனர்</u>

- உதாரன் கொலைக்களத்தில் கத்தியின் கீழ் தலை குனிந்து நின்றான். இக்காட்சியைக் கண்ட அழகிய சிலையை பால் அபிசேகம் செய்து பார்ப்பது போல அமுதவல்லியின் கண்ணீர் வெள்ளம் அவளது அடிகளில் சொரிவதைக் கண்டனர்.
- அங்கிருந்த மக்கள் அனைவரும் 'ஓ' எனக் கதறி அழுதனர். அன்பு செய்தோர் இவ்வுலகில் வாழ்தல் கூடாதோ? என்று அமுதவல்லி பதைபதைத்தாள்.
- இதை கேட்ட நாட்டு மக்கள் 'இது கொடியது' என்றார்கள். சொல்லியதோடு கொடுவாளைக் கொலைஞர் கைகளில் இருந்து பறித்தனர். அந்தக் கொலையாளர்கள் உயிர் தப்ப ஓடலாயினர்.
- மக்கள் கவிஞனுக்கும் அமுதவல்லிக்கும் மீட்சி தந்தனர்.

3. <u>புத்தர் ஏழைச் சிறுவனுக்கு போதித்த இயற்கையின் உண்மைகளைக் கூறுக.</u>

*<u>முன்னுரை:</u>*

எட்வின் அர்னால்டு எழுதிய என்ற நூலுக்கு கவிமணி எழுதிய தமிழாக்கமே ஆசிய ஜோதியாகும். இந்நூல் புத்தரின் வாழ்க்கை வரலாற்றை விரிவாக எடுத்தியம்புகிறது.

*<u>புத்தரை சிறுவன் காணல்:</u>*

அரண்மனையிலிருந்து வெளிப்பட்டுச் சென்ற புத்தர் வழி நடந்த கலைப்பால் சோர்ந்து கிடந்தார். அவரைக் கண்ட ஓர் இடைச் சிறுவன் உலகமக்கள் காண்பதற்கு அரியதாக விளங்கக்கூடிய ஐயனாகிய புத்தரைத் தெய்வமாக நினைத்து கைகள் குவித்து வணங்கி நின்றான்.

*<u>புத்தரின் மயக்கம் தெளிதல்:</u>*

நிலத்தில் மயங்கிக் கிடந்த புத்த பெருமான் மெல்ல நிமிர்ந்து இடைச் சிறுவனிடம் கலத்தினில் கொஞ்சம் பாலை தரச் சொல்லிக் கேட்டார்.

*<u>சிறுவனின் மறுமொழி:</u>*

புத்தர் கூறியதைக் கேட்ட இடைச் சிறுவன், அண்ணலே உன்னை என் கையால் தீண்டுதல் கூடாது. நான் ஒரு இடையன் ஆவேன் எனப் பதிலுரைத்தான்.

புத்தரின் அமுதமொழி:

உலகம் போற்றும் புகழை உடைய பெரியோன் புத்தபிரான் சிறுவன் கூறியதைக் கேட்டு கருணையினால் அமுத மொழிகளைக் கூறலாயினான்.

துன்பம் வரும் போதும் உள்ளம் இரங்கிடும் போதும் நம் இன்னல்கள் போக்கிட உடன் பிறந்தவர் போல் மக்கள் உறவு கொண்டு உதவி செய்வர். அந்நேரத்தில் ஓடும் இரத்தத்திலும் வடிந்து ஒழுகும் கண்ணீரிலும் எங்கு தேடிப் பார்த்தாலும் சாதி தெரியாது.

***இயற்கையின் உண்மை:***

இவ்வுலகில் வாழும் எவர் உடம்பிலும் ஓடும் இரத்தத்தின் நிறம் சிவப்பாகும். எவரின் விழியிலிருந்து வடியும் நீரின் சுவை உவர்ப்பே ஆகும். இதுவே இயற்கையின் உண்மையாகும்.

***முடிவுரை:***

"பிறப்பினால் உயர்வு தாழ்வு பாராட்டக்கூடாது" என்பதே ஆசியஜோதியின் மூலமாக கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை உரைக்கின்றார்.

4. **அனுபவித்து வாழ்வதே வாழ்வு என்ற உண்மையை கடவுள் கூற்றாக கண்ணதாசன் எவ்வாறு எடுத்துரைக்கிறார்?(5)**

கண்ணதாசனின் கவிதைகள் ஆழ்ந்த தத்துவமும் இலக்கிய செறிவும் நிறைந்ததாய் இருக்கும் இவருடைய கவிதைகள் ஏழு தொகுதிகளாக வெளிவந்துள்ளன. திரைப்படப் பாடல்களில் தத்துவம் மிகுந்த பல பாடல்களை இவர் பாடியுள்ளார்.

***இறைவனோடு உரையாடல்:***

பிறப்பின் பின் வருவது யாது என இறைவனைக் கேட்டேன். பிறந்து பார் என இறைவன் கூறினான். படிப்பெனச் சொல்வது யாது என வினவினேன். படித்துப்பார் புரியும் என்றான்.

***அறிவு:***

அறிவு என்பது எது என கேட்டபோது எதையும் வாழ்வில் நாம் அறிந்து கொள்ளும் போது பெறப்படும் பாடமே அறிவாகும் என்றான்.

***அன்பு:***

அன்பென்பது யாது எனக் கேட்டபோது உன்னிடம் உள்ளதை பிறர்க்கு கொடுத்து பார். அன்பு எப்படிப்பட்டது என உனக்கு புரியும். பிறரின் மகிழ்வில் நாம் மகிழ்வதே அன்பாகும்.

***பாசம்:***

மற்றவர் என் மீது கொண்ட பாசத்தை நான் எப்படி உணர்வது என்று கேட்டபோது உன் அன்பை எதிர்பார்ப்பு இல்லாமல் பகிர்ந்து பார் பாசம் புரியும் என்றார்.

***மனைவி:***

மனைவியின் மூலம் ஒருவன் பெறும் இன்பம் எத்தகையது எனக் கேட்டேன். ஒரு பெண்ணை மணந்து விரும்பி இல்லறம் நடத்தினால் வாழ்வென்பது எது எனப் புரியும் என்றார்.

***பிள்ளைப்பாசம்:***

பிள்ளைகள் என்பது யார் எனக் கேட்டேன் இனிய இல்லறம் நடத்தி பிள்ளைகளைப் பெற்றுப்பார் என்றான் இறைவன்.

***முதுமை வறுமை இறப்பு:***

முதுமைப் பருவம் எப்படிப்பட்டது என்ற போது முதுமைவரைக் காத்திருந்து முதிர்ந்து பார் என்றான். வறுமையை அறிய எல்லாவற்றையும் இழந்து பார் என்றான். இறப்புக்கு பின் வாழ்வு எப்படி இருக்கும் எனக் கேட்டபோது இறந்து பாரென இறைவன் பணித்தான்.

***அனுபவமே இறைவன்:***

எல்லாவற்றையும் நான் அனுபவித்துதான் கற்றுக் கொள்ள வேண்டுமெனில் இறைவனே நீ எதற்கு எனக் கேட்டேன். அந்த அனுபவமே நான் தான் என அன்பால் நெருங்கி வந்து கூறினான்.

நாம் வாழ்வில் அனுபவிக்கும் ஒவ்வொரு அனுபவமும் இறைவனை அறியும் பாடம் என கவிஞர் உரைக்கின்றார்.

5. **ஏழைகளின் கனவு அதிகார வர்க்கத்தால் நசுக்கப் படுவதை வைரமுத்து எவ்வாறு எடுத்துரைக்கிறார்?(5)**

ஏழைப் பெண்ணொருத்தி தன் குடிகார கணவனோடு போராடி தன் உழைப்பால் சிறுக சிறுக கட்டிய வீட்டை இழக்கும் போது அவர் படும் பாட்டை வைரமுத்து தன் வரிகளின் மூலம் நேர்த்தியாக வெளிப்படுத்துகிறார்.

தான் கட்டிய வீட்டை சர்க்கார் ஆட்கள் இடிக்க வருவதைக் கண்டு பதைபதைத்து போகிறாள். தன் மகனை அழைத்து கள்ளுக்கடையில் இருக்கும் தன் கணவனை கையோடு கூட்டி வரச் சொல்கிறாள்.

சர்க்காரு சாமிகளா நான் வியர்வை சிந்தி சிலந்தி கூடு கட்டுவது போல கட்டிய வீட்டினை இடிக்க வந்தீங்களா…. சித்தெரும்பு போல சின்னதாய் இருக்கும் என் வீட்டை இடிக்க ஜீப்பேறி வந்தீங்களா எனப் புலம்புகிறாள்.

வெள்ளாட்டு காம்பில் விஷம் வடியக் கனவு கண்டேன். ஓடையெல்லாம் இரத்தம் ஓடிவரக் கனவு கண்டேன். நான் கண்ட கனா பலிச்சிருச்சே எள்ளுச் செடி மேல இடி விழுந்து கருகியது போல என் வாழ்வு ஆனதே என அழுகிறாள்.

காலால் எட்டி உதைச்சாலே இடிந்து விடும் என் சிறிய வீட்டை இடிக்க கடப்பாரை எதுக்கு எனக் கேட்கிறாள். இவ்வீட்டைக் கட்ட நான் பட்டபாடு நாய் படுமா? பேய்படுமா என அவள் பட்ட அவஸ்தையை கூறுகிறாள்.

முன் சுவரு எழுப்ப என் மூக்குத்திய அடகு வைச்சேன். பித்தளைக்குடம் வித்து பின் சுவரு கட்டினேன். கதவுக்கு மரம் வாங்க காசில்ல அதனால கோணியில கதவு செஞ்சு மாட்டிவிட்டேன்.

சீட்டுக்கு பணம் புடிச்சு, சித்தாளு வேலை செஞ்சு சிறுக சிறுக சேர்த்து வைச்சு கூரைக்கு ஓடு வேய்த்தேன்.

இவ்வாறு ஒரு ஏழைப் பெண்ணொருத்தியின் கனவு வீடு இடிக்கப்படும் அவலத்தினை கவிஞர் எடுத்துரைக்கிறார்.

6. <u>வாழை மரம் தன் நிலையோடு இன்றைய ஏழைகளின் நிலையை ஒப்பிடும பாங்கினைக் கூறுக. (அல்லது)</u>
<u>சமுதாய உணர்வு மிக்கவர் மு.மேத்தா என்பதை ‘வாழை மரத்தின் சபதம்’ என்ற கவிதை வழி நிறுவுக.</u>

***<u>வாழை சொல்லும் தத்துவம்:</u>***

மரங்களில் நான் ஏழை, நாட்டோர் எனக்கு வைத்த பெயர் வாழை என்பதாகும். கருத்தாங்கிப் பிள்ளையினைப் பெற்றெடுத்த பின்னர்க் கண் மூடும் தாய் போன்றவள் நான். எனக்குக் கீழே குருத்து விடும் பக்கக் கன்றுகளுக்கு வழியை விட்டுக் குறிப்பறிந்து நான் ஒதுங்கி விடுவதால் அடுத்தத் தலைமுறையின் தத்துவத்தைப் புவிக்குக் காட்டும் தடயமாக நான் திகழ்கிறேன்.

***<u>மண்ணின் உறவு:</u>***

வானத்தைத் தொடும் அளவிற்கு வளரவேண்டும் என்ற கனவு காணும் வழக்கம் என்னிடத்தில் இல்லை. அதற்கான மயக்கமும் இல்லை. மானிடரின் புழுத்கால் பிதிகின்ற இந்த மண்ணிடத்தில் தான் எனக்கு உறவு அதிகம். ஆதலாலே மரங்களிலே நான் குட்டைமரம். மனிதர்களின் கைகளுக்கு எளிதாக எட்டும் மரமாக இருக்கின்றேன்.

***<u>விளம்பரங்கள்:</u>***

மனிதர்கள் செய்யும் சிவப்பு விளம்பரங்கள் சுவரின் முதுகில் மாட்டியிருக்கும். ஆனால் நானோ தானாய் எழுந்து தட்டி கட்டிய தரையின் பச்சைநிற விளம்பரப் பலகையாக உள்ளேன்.

***<u>அடையாள மரம்:</u>***

அழைப்பிதழ்கள் திருமணத்தின் அறிமுகங்கள். ஆனால் நாங்கள் தெய்வங்கள் இருக்கும் கோவிலில் காவலாய் இருக்கும் துவார பாலர்களைப்போல், திருமணம் நடக்கும் வீட்டை மற்றவர்கள் அறிந்து கொள்ள அடையாள மரமாகவும், காவல்காக்கும் துவார பாலகராகவும் உள்ளோம்.

*குறையை நிறையாக்குதல்:*

மரங்களில் குட்டை மரம் என்னும் குறை எனக்கிருந்தாலும். என்னுடைய பெரிய இலைகளால் அந்த அவப்பெயரைத் தள்ளி நிறையாக்கியவன். என் இலைகள் மயிலிடம் கடன் வாங்காத பச்சை நரம்புகளால் ஆன தோகைகளைப் போல இருக்கும்.

*விருந்தோம்பல்:*

சமையற்கலை, என்னுடைய இலை என்னும் வாகனத்தில் ஏறிவரும் போது உபசரிப்பின் இலக்கியமாக விளங்கும். விரல்களின் மூலம் விருந்தினர்களின் நன்மதிப்பும், விரைவான வரவேற்பும் கிடைக்கும்.

*வாழையின் வருத்தம்:*

உலகில் வாழும் மனிதர்கள் எல்லாம் உண்பதற்கு முன்னர் என்னை 'இலை' என்பார்கள். சாப்பிட்டு முடித்த உடனேயே என்னை 'எச்சில் இலை' என்று குப்பைத் தொட்டியில் தூக்கி எறிந்து விடுவார்கள். மக்கள் கூட்டத்தில் மரியாதையுடன் இருக்கும் நாங்கள் குப்பைத் தொட்டிகளில் கிடக்கும்போது ஆயாச மூச்சு விட்டபடி இருப்போம்.

*சமுதாயத்தின் அவலம்:*

குப்பைத் தொட்டியில் இருக்கும் இலையில் உள்ள உணவையும் துடைத்துச் சாப்பிடுவதற்கு இந்த நாட்டில் எல்லாத் தெருக்களிலும் இருக்கும் தெரு இராஜாக்கள் ஒருவரோடு ஒருவர் கட்டிப் புரள்கிறதைப் பார்க்கும்போது எதிர்காலத்தில் இந்தச் சமுதாயம் அடைய இருக்கும் இருட்டை எண்ணிப் பதைக்கிற, என் இதயம் படும் வேதனையை வார்த்தைகளால் சொல்ல உவமைகள் ஏதும் இல்லை என்று கூறுகிறார்.

இந்திய நாட்டின் எதிர்காலம் பற்றிக் கவிஞர் கொண்ட கவலையின் வெளிப்பாடுதான் இது. இவ்வகையில் வாழை மரத்தைப் பற்றிக் கற்பனைச் சிறப்போடு பாடினாலும், நடைமுறையில் உள்ள சமுதாய அவலத்தை சொல்லத் தயங்கவில்லை என்பதிலிருந்து கவிஞரின் சமுதாய உணர்வு வெளிப்படுகிறது.

7. தாலாட்டு பாடலில் வெளிப்படும் உறவின் பாசத்தை வெளிப்படுத்துக.

தாலாட்டுப் பாடல் என்பது தாயின் அன்பை மட்டுமல்லாது தாயின் பாடல்வழி மற்ற உறவுகளின் பாசத்தையும் வெளிப்படுத்துகிறது.

*தாய்மாமன்:*

ஒரு தாய் தன் உடன்பிறந்த உறவான மாமன் உறவையே முதலில் பாடுகிறாள். உயர்ந்த தலைப்பாகை கட்டி மனமகிழ்வோடு வல்ல வட்டு வேட்டி கட்டி சபையில் பேசும் பெருமை கொண்டவனோ உன் தாய்மாமன்.

காடுகளுக்குச் சென்று வேட்டை நாயை ஏவிவிட்டு வேட்டைக்கு போகும் வீரனோ உன் சின்ன மாமன். அவன் வேட்டைக்குப் போகையிலே பன்றியும் பதினெட்டு மானும் சிக்குகின்றன. மேலும் சிங்கமும் கண்படுமோ என என் தம்பியின் வீரத்தை தாலாட்டில் பாடுகிறாள் தாய்.

*அழுகையின் காரணம்:*

குழந்தை அழும்போது அதன் அழுகையை நிறுத்த தாய் படாதபாடு படுவாள். யார் அடிச்சதால் நீ அழுகிற உன்னை அடிச்சாரை சொல்லியழு என் கண்ணே! பாட்டி அடிச்சாளோ பால் வார்க்கும் கையாலே, மாமன் அடிச்சானோ மல்லிகைப் பூச் செண்டாலே, அத்தை அடிச்சாலோ அரளிப்பூச் செண்டாலே, அண்ணன் அடிச்சானோ அணைத்தெடுக்கும் கையாலே. அடிச்சாரை சொல்லி அழு, அவருக்கு தண்டனைகள் கொடுத்திடுவேன். தொட்டாரைச் சொல்லி அழு, தோள் விலங்கு போட்டிடுவோம்.

என்று தன் குழந்தையின் அழுகையை சமாதனப்படுத்தும் நோக்கில் அனைத்து உறவுகளையும் குழந்தைக்கு சொல்லித் தருகிறாள். தாலாட்டுப்பாடல் குழந்தையின் அழுகைக்கு மட்டுமல்லாது உறவுகளின் பாசத்தை மேம்படுத்தவும் உதவுகிறது.

8. <u>ஒப்பாரி பாடல் வெளிப்படுத்தும் கணவனை இழந்த பெண்ணின் மன உணர்வினை எழுதுக.</u>

ஒரு பெண் தனக்கு நேர்ந்த இழப்பைத் தாங்க இயலாத பொழுது சோக உணர்ச்சிகளின் வடிகாலாக ஒப்பாரிப் பாடப்படுகிறது. மற்ற உறுவுகளை விட தன் கணவனை இழந்த பெண் படும் பாட்டையே அதிகம் ஒப்பாரி பாடல் பிரதிபலிக்கிறது.

ஆலமரம் போல் அசையாது என்னுடனே இறுதிவரை நிலையாக இருப்பேன் என்று கூறியவன் இன்று இல்லை. அதனால் அவள் மனம் கரையிடிஞ்சு மரஞ்சாய்ந்தது போல கவலை கொண்டாள்.

கணவனின் நினைவுகள் மனதில் நெருஞ்சி முள்ளாய்க் குத்துவதை,

“சில்லென்று பூத்த சிறுநெருஞ்சிக் காட்டுடே
நில்லென்று சொல்லி நிலை நிறுத்திப் போனீரே”

என்ற வரிகளின் மூலம் வெளிப்படுத்துகிறாள்.

ஆற்றங்கரையோரம் அன்னத்தை மேய விட்டேன். அன்னம் என்றும் பாராமல் அம்பு கொண்டு எய்தார்கள்.

தலைசீவி தாழம்பூ சூடி அழகு பார்த்த என் தாயும் இன்று நான் பூச்சூடாமல் போகும்படி என் தலையெழுத்து மாறும் என அறியவில்லை.

நான் மட்டும் அழவில்லை. உன் அன்பு குணத்துக்காக இவ்வூரே அழுகின்றது. மானழுக மயிலழுக மாடப்புறாக் குஞ்சழுக, சிவகிரி சனமெல்லாம் தெருத் தெருவாய் நின்றழுக யார் யார் வந்து கூப்பிட்டாலும் அசையாமல் நின்ற மகராசனே எமன் வந்து கூப்பிடவும் என்னைவிட்டு போனீரே, பூந்தேரு ஏறி விட்டீரே என ஒப்பாரிப் பாடல் மூலம் தன் வேதனையை வெளிப்படுத்துகிறாள்.

9. <u>போரின்றி வெற்றி எவ்வாறு அமைய வேண்டும் என இறையன்பு கூறுகிறார்? (5)</u>

<u>முன்னுரை:</u>

சண்டையிடாமல் வெற்றி பெறுவதுதான் சிறந்த போர் முறை என்கிறார் இறையன்பு. ஆயுதத்தை பயன்படுத்தாமல் வெற்றி பெற்ற ஒரு துறவியின் கதையின் மூலம் இதை உணர்த்துகிறார்.

<u>வாலில்லாமல் போர்</u>

- போகுடென் என்கிற ஜென் துறவி ஒருவர் இருந்தார். ஒரு முறை அவர் இன்னொரு சாமுராயுடன் இருவர் மட்டுமே செல்லும் படகில் பயணம் செய்து கொண்டிருந்த போது அந்த சாமுராய் கேட்டார். ‘நீங்கள் எந்த ஜென் பள்ளியைச் சார்ந்தவர்?’
- போகுடன் அதற்கு ‘நான் வாள் இல்லாச் சண்டைப் பள்ளியைச் சார்ந்தவன் என்றார்’.
- ‘வாளைப் பயன்படுத்தாமல் வெற்றிபெற முடியும் எனக் கருதுகிறீர்களா? என அந்தச் சாமுராய் கேட்டார். ஏன் முடியாது? அப்படியென்றால் நாம் இருவரும் மோதலாமா? கரைக்கு படகை விடுங்கள் என்றார் சாமுராய். அவர் கைகளில் பலவித அளவுகளில் வாட்கள் இருந்தன.
- போகுடென் சொன்னார், ‘சற்று தூரமாக ஆள் அரவமற்ற இடத்துக்கு செல்வோம். நம் சண்டையை மற்றவர்கள் வேடிக்கை பார்ப்பதை நான் விரும்பவில்லை.
- தூரமான தீவுப் பகுதிக்குச் சென்றார். சாமுராய் இறங்கி வெகுதூரம் சென்று போருக்கு தயாரானார். போகுடென் அவர் பின்னே வருவது போல பாவனை செய்து படகில் மறுபடியும் ஏறி பலமாக துடுப்பு போட்டு வெகுதூரம் ஆழமான இடத்திற்கு முன்னேறினார். சாமுராய் அந்தத் தீவிலிருந்து எப்படித் திரும்புவது என்ற ஆழமான யோசனையில் ஆழ்ந்தார்.
- அவர் தன்னுடைய வாளையெல்லாம் கடலில் தூக்கியெறிந்தார். அவர் முன் வந்து நின்ற படகில் போகுடென் அவரை மறுபடியும் ஏற்றிக் கொண்டார். அப்போது தான் வாளற்ற பள்ளியின் போர் முறையை அவர் புரிந்து கொண்டார்.

<u>உண்மையான சாதனை:</u>

- சாதனை என்பது காயங்களை ஏற்படுத்துவதில் இல்லை தாக்கங்களை ஏற்படுத்துவதில் இருக்கிறது என்கிறார் இறையன்பு.

- வயிறு வரை தாடி வளர்த்தும், முழு நீள நகம் வளர்த்தும் கூடச் சாதனை புரியலாம்.
- அப்படி வளர்ப்பவர்களின் அருகில் வாழ்பவர்களே உண்மையான சாதனையாளர்கள்.
- வெகுநேரம் பேசுபவர்களைக் காட்டிலும் அதைக் கேட்பவர்கள் தான் மகத்தான சாதனை புரிந்தவர்கள்.
- உண்மையான சாதனையாளர்கள் உடலை முறுக்கி சதையைத் திரட்டி எல்லா நேரமும் தங்கள் பலத்தை வெளிப்படுத்திக் கொண்டே இருப்பதில்லை.
- தேவைப்படும் போது மட்டுமே புயலாகவும், சூழல் வரும் போது சூறாவளியாகவும், குளிர்ச்சியைத் தருவதில் தென்றலாகவும், பரிணமிக்கும் முதிர்ச்சி அவர்கள் செயல்களில் உண்டு.

<u>முடிவுரை:</u>

சாதனையென்பது புகழில் இல்லை. பொருளில் இல்லை. பெயரில் இல்லை. பெருமையில் இல்லை. நம்மால் முடிந்தவரை மற்றோர் முகத்தில் வற்றாத மகிழ்ச்சியை, குன்றாத வளர்ச்சியைப் பொருத்திப் பார்க்கும் கருணைதானே காலம் கடந்தும் வாழும் வளமான சாதனையாகும் என்கிறார் இறையன்பு.

10. <u>உள்ளுணர்வு கனவாக வெளிப்படுவதற்கு எம்.எஸ். உதய மூர்த்தி கூறும் சில சான்றுகளைக் கூறுக.</u> (5)

- அமெரிக்காவில் வாழ்ந்த ரோவே என்பவர் கை கால் முடக்கப் பட்டவர். அவர் மனைவி துணி தைப்பவர்.
- மனைவியின் கஷ்டத்தை போக்குவதற்கு தையல் இயந்திர ஊசியை தயாரிக்க எண்ணினார். ஆனால் இயந்திரத்தில் அப்படிச் செய்வது சாத்தியமில்லை என எண்ணினார்.
- ஒரு நாள் அவர் தூக்கத்தில், அவரை ஆப்பிரிக்க மாமிச பட்சிணிகள் தின்றுவிட தீர்மானித்தன. அப்போது 24மணி நேரத்தில் தையல் இயந்திர ஊசியை கண்டுபிடிக்காவிடியீல உன்னைச் சாப்பிட்டு விடுவோம் என்றன.
- அவர்கள் கையில் ஈட்டி இருந்தது. ஈட்டியின் முனையில் ஓர் ஓட்டை இருந்தது.
- இத்தகைய கனவுடன் அவர் விழித்துக் கொண்டார். ஈட்டி துசி தைக்கும் ஊசியாக விரிந்தது. புதிய தையல் இயந்திர ஊசியைச் செய்தார். அது வேலை செய்தது.
- பீடர் ஹியூரிக்கோ அமெரிக்காவில் வாழ்பவர். அமெரிக்காவில் ஐரோப்பாவில் நடந்த பல கொலைகளையும் திருட்டுகளையும் துப்புத் துலக்க இவர் பெரிதும் உதவியிருக்கிறார்.
- கண்ணை மூடிக் கொண்டு சில சமயம் ஆழ்ந்து யோசிக்கும் போது பல நிகழ்ச்சிகள் அவர் கண்முன் தெரிகின்றன.
- அதை அப்படியே விளக்குவார். இதன் உதவி கொண்டு போலிஸ் குற்றங்களைக் கண்டு பிடிக்கிறது. பயங்கரமான கொலை, கொள்ளை திருட்டு இவற்றைக் கண்டு பிடிக்க இவர் உதவியிருக்கிறார்.
- இவர் பெயிண்டராக வேலை பார்க்கும் போது கீழே விழுந்ததில் மூளையில் நல்ல அடிபட்டது.
- உடல் குணமானவுடன் அவருக்கே பயனளிக்கும் வகையில் பல விஷயங்கள் அவருக்குத் தெரிய ஆரம்பித்தன. இவரது திறன் அதிசயிக்கும் வகையில் இருந்தது.
- ஆழ் மனம் சில சமயம் நமக்கு எதிர்பாராமல் உதவுகிறது என்பதற்கான சான்றுகள் இவை.

11. <u>உ.வே. சாமிநாதய்யர் தமிழ் மொழிக்குச் செய்த அரும்பணிகளை விளக்குக.</u> (10)

<u>முன்னுரை:</u>

- உ.வே.சா. பழந்தமிழ் இலக்கியங்களை கண்டுபிடித்து அச்சேற்றித் திருத்தமான உயர்ந்த பதிப்புகளாக வெளியிட்டார். நூல்களை கண்டுபிடித்து வெளியிடும் முயற்சியில் அவர் அடைந்த சிரமங்களுக்கு அளவே இல்லை
- அவருக்கு ஏற்பட்ட பலவித எதிர்ப்புகளில் முக்கியமானது கரையான்கள். கரையான் அவர் நடத்திய போரை ஒரு மகா கவியால் மட்டுமே வர்ணிக்க முடியும் என்கிறார் கல்கி.

<u>சுவடி பயணம்:</u>

- ரயிர் பாதைக்கு வெகு தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் ஏதோ ஒரு வீட்டின் பரணில் ஓலைச் சுவடி கிடைக்கும். இதை ஆகாரமாக உட் கொண்டு விடுவதென்ற தீர்மானத்துடன் கரையான் படைகள் முன்னேறி வந்து கொண்டிருக்கும். அவர் மேற்படி கிராமத்தை நோக்கி விரைந்து செல்வார்.
- ரயிலோ கட்டை வண்டியோ கால்நடையோ எதுவாயிருந்தாலும் அவருக்கு லட்சியமில்லை. பகல் இராத்திரி பாராமல் ஓடிப் போய் சுவடியைத் தேடுவார்.
- இவ்வாறு ஒரு சமயம் கவடி இருந்த வீட்டை தேடி வந்து சேர்கிறார் உ.வே.சா. வீட்டு எஜமானைப் பார்த்து, 'ஐயா உங்கள் வீட்டில் பழைய ஓலைச் சுவடி ஒன்று இருக்கிறதாமே? என்று கேட்கிறார்.
- பரண் மேல் கிடந்தது என்னத்துக்கு கேட்கிறீர்கள்? என்கிறார் வீட்டுக்காரர். அவரிடம் சாமிநாதய்யர் பழந்தமிழ் இலக்கியங்களின் பெருமையைச் சொல்லி ஓலைச் சுவடியைப் பார்க்க அனுமதி வாங்குகிறார்.
- உ.வே.சா. அவர்கள் மிகவும் பாடுபட்டு பல ஓலைச்சுவடிகளை அச்சேற்றினார்.

**பண்புகள்:**

- கல்கி முதன் முறையாக உ.வே.சா.வை ஒரு விசேஷ ஆண்டு மலருக்கு கட்டுரை கேட்கும் நோக்கமாக சந்தித்தார். அப்போது கல்கிக்கு கொஞ்சம் பயம் கலந்த பதட்டம் இருந்தது. ஏனெனில் பழந் தமிழ் பண்டிதர் தம்மை எப்படி நடத்துவாரோ என்று எண்ணினார்.
- தமிழ் தாத்தா அவர் பயந்தது போல் இல்லாமல் நம்மை போல் அவரிடம் வீட்டுத் தமிழிலேயே பேசினார்.
- கல்கி அவரை அறிமுகப் படுத்திக் கொண்டதும், டி.கே.சிதம்பர முதலியார் உம்மைப் பற்றி சொல்லியிருக்கிறார் என்றார் உ.வே.சா.
- தமிழ்த் தாத்தா மேலும் கல்கியிடம் ஒரு விஷயம் கூறினார். சில காலத்துக்கு முன் வெளியான முதல் தமிழ் பேசும் படத்தைப் பற்றி, தமிழ் பாட்டி என்ற தலைப்பில் கல்கி கட்டுரை ஒன்றை எழுதியிருந்தார் அக்கட்டுரையையும், தப்பிலிகள் என்ற கதையொன்றைப் பற்றியும், தமிழ்த் தாத்தா தனது பாராட்டுதலை தெரிவித்தார். இதைக் கேட்டதும் கல்கி திகைப்பில் ஆழ்ந்தார்.
- உ.வே.சா அவர்கள் பெரிய பண்டிதராய் இருப்பினும் மற்றவரின் திறமையை மனம் திறந்து பாராட்டும் பண்பைப் பெற்றிருந்தார்.

**மற்றொரு சம்பவம்:**

- உ.வே.சா. அவர்களை பார்க்க ஒருவர் வந்து இருந்தார். அவர் மற்றவர்களைப் புத்தகம் எழுதச் சொல்லி தம் பெயரால் வெளியிடும் மகானுபவர் ஆவார். அவர் அந்த அறையில் இருந்த ஓலைச் சுவடிகளை எடுத்துப் பார்க்க ஆரம்பித்தாராம்.
- உடனே ஐயர்வாள "இதோ பாரும் நீர் என்னைப் பார்க்கத்தானே வந்ததாகச் சொன்னீர்? என்னைப் பார்க்க வந்தால் என்னைப் பார்த்துப் பேசும். இல்லாவிட்டால் நடையைக் கட்டும். அங்கே இங்கே பார்த்து விழிக்க வேண்டாம்" என்றாராம்.
- உ.வே.சா. தன் மனதில் தவறு என எண்ணியதை உடனே அவரிடம் சொல்லும் மனப் பாங்கினைக் கொண்டிருந்தார்.

**சுயசரிதை:**

- உ.வே.சா.வின் பரம்பரைக் குணம் என்னும் கட்டுரையை கல்கி வாசித்தார். அதில் உண்மையாக நடந்த சம்பவம் ஒன்றை எளிய பேச்சு நடையில் மிக ரஸமாக எழுதியிருந்தார். இவ்வளவு எளிய நடையில் எழுதும் துணிச்சல் உ.வே.சா.வுக்கு இருக்கும் என்பதை கல்கி அறிந்தார்.
- உ.வே.சாவை கல்கி சந்தித்த தருணங்களில் எல்லாம் அப் பெரியாரின் வாழ்க்கை அனுபவங்களை வாய்மொழியாக கேட்டார். அந்த அனுபவங்களையெல்லாம் அவர் புத்தகமாக எழுத வேண்டும் என்ற ஆசை கல்கிக்கு உண்டாயிற்று.

- தமிழ் ஆர்வலர்களின் வேண்டுகோளை அவருடைய தலை சிறந்த சிஷ்யரான ஸ்ரீ.கி.வா.ஜகநாதய்யரும் அருமைப் புதல்வர் ஸ்ரீ கல்யாண சுந்தரமய்யரும் ஆதரித்தபடியால் கடைசியில் உ.வே.சா. சுயசரிதை எழுத ஒப்புக் கொண்டார்.

**முடிவுரை:**

- உ.வே.சா. அவர்கள் தமிழுக்கு செய்த தொண்டு அளப்பறியது, பல ஓலைச் சுவடிகளை தேடித்தேடி சேகரித்து அச்சேற்றினார்.
- எளியவரிடம் அவர் பழகும் பண்பும் போற்றுதற்குரியது.

12. **மாங்கல்யப் பிச்சை நாடகம் மூலம் அறியலாகும் கட்டபொம்மன் ஊமைத்துரையின் பண்பு நலன்களை எடுத்துரைக்க.** (10).

**முன்னுரை:**

- மாங்கல்யப்பிச்சை நாடகம் தொண்டைமான் அதிகார ஆசையில் கட்டபொம்மனையும், ஊமைத்துறையையும் கும்பெனியாரிடம் வஞ்சகமாக ஒப்படைத்த வரலாற்றை எடுத்துக் கூறுகிறது.
- ஊமைத்துரை கட்டபொம்மனின் சகோதரன் ஆவான். தொண்டைமான் கட்டபொம்மன் ஊமைத்துரை இருவரும் தலை மறைவாக வாழ்ந்து வருவதை அறிந்து விருந்து கொடுத்து அடைக்கலம் தருவதாய் கூறி அரண்மனைக்கு அழைக்கிறான்.

**ஊமைத்துரையின் சாதுர்யம்:**

- தொண்டைமானின் விருந்தை உண்ட பின் கட்டபொம்மனுடன் அறையில் ஓய்வெடுக்கும் போது ஊமைத்துரை மூக்கின் மேல் வீரன் ஒருவன் கைவைக்கும் போது ஊமைத்துரையின் கரங்கள் சாடிப் பிடித்து வீரனைத் தூக்கி எறிகின்றன.
- தூக்கத்திலும் விழிப்புடனே இருக்கும் ஊமைத்துரையின் சாதுர்யம் இதில் வெளிப்படுகிறது.

**சூழ்ச்சியை அறிதல்:**

- உண்டி கொடுத்து உறக்கம் கொள்ளும் போது உயிரைப் பறிக்கும் திட்டம் தீட்டிவிட்டார் தொண்டைமான் என அறிந்தான் ஊமைத்துரை.
- கட்டபொம்மனிடம், விருந்து கொடுத்து விழி மூடும் போது வெட்டிச் சாய்க்கத் திட்டம் தீட்டி விட்டார்கள்.
- அண்ணா நான் விழித்திருந்ததால் நாம் பிழைத்தோம் என்று கூறுவதில் இருந்து ஊமைத்துரையின் சூழ்ச்சி அறியும் திறன் வெளிப்படுகிறது.

**நாட்டுப்பற்று:**

- கட்டபொம்மன் உண்டி கொடுத்தோரை வஞ்சிக்காதே என்றான். அதற்கு ஊமைத்துரை நம்பிக்கையால் அழிந்து போனது தமிழகம். நன்றியைக் கடைபிடிப்பதால் அழிந்து போகிறது தமிழகம்.
- இன்னுமா புல்லுருவிகளிடம் நம்பிக்கை வைக்கச் சொல்லுகிறீர்கள் எனக் கூறுகிறான்.
- தமிழக அரசரகளிடம் ஒற்றுமை இல்லாத காரணத்தாலேயே கும்பெனியர்கள் பெறுகிறார்கள்.
- நாம் ஓர் அன்னை வயிற்றில் பிறந்து ஒருவருக்கொருவர் துரோகம் செய்தாலேயே நாம் அடிமைப்பட்டு கிடக்கின்றோம் எனத் தாய் நாட்டின் பற்றை வெளிப்படுத்துகிறான் ஊமைத்துரை.
- கட்டபொம்மன் வீரனாயிருந்தாலும் நம் பண்பாட்டையும் பெண்களையும் பாதுகாப்பவனாக விளங்கினான்.

**ராணியின் பரிசு:**

- தொண்டைமானின் அரசி தன் தோழியின் மூலம் தன் மாங்கல்யத்தை பரிசாக கட்டபொம்மனுக்கு அனுப்புகிறாள். ஊமைத்துரை தொண்டைமானை கொல்லப் போவதாக சூளுரை செய்ததை கேட்டு அஞ்சிய ராணி இச்செயலை செய்கிறாள்.

**கட்டபொம்மனின் பண்பு:**

- கட்டபொம்மன், ராணியின் பொன் தாலிக்கு என்னாலோ என் தம்பியாலோ ஆபத்து ஒன்றும் இல்லை. நாங்கள் அக்கிரமக்காரர்கள் அல்லர். உண்ட வீட்டிற்கு என்றுமே துரோகம் செய்ய மாட்டோம் எனக் கூறி தோழியை அனுப்புகிறாள். இதிலிருந்து கட்டபொம்மனின் நல் மனம் புலனாகிறது.
- ஊமைத்துரை தன் அண்ணனிடம் தொண்டைமானின் உயிரை எடுக்க உத்தரவு வாங்க வருகிறான். அப்போது கட்டபொம்மன் என் சகோதரியின் மாங்கல்யமாக இதை எண்ணுகிறேன். பெண் அபலை என்னிடம் அபயம் வேண்டினாள். நான் அபயம் கொடுக்க வேண்டும் இது பாண்டி நாட்டுப் பண்பு ஆகும். உன்னுடைய உடைவாளை இடுப்பிலே செருகு என ஊமைத்துரையை சமாதானம் செய்கிறான்.

**விரத்தை விட கொடை பெரிது:**

- ஊமைத்துரை தன்னுடைய சபதம் வீணாக வேண்டுமா எனக் கேட்டபோது, கட்டபொம்மன் தம்பி நான் பெண்ணுக்கு என்றுமே எதிரிகள் அல்லர். அன்பின் அடிமைகள். நாம் நம்பிக்கை துரோகம் செய்தல் கூடாது. பெண்ணின் தெய்வம் அவர் கணவன் மட்டுமே. நீ கொல்லத் துடிப்பது விரோதியை அல்ல. ராணியாரின் தெய்வத்தை எனக் கட்டபொம்மன் கூறுகிறான்.
- வீரத்தை விடப் பெரிது கொடை. விரத்தை விட பெரிது தியாகம் தம்பி, நிமிர்ந்து நில் நம் பண்பு வெல்லட்டும் எனக் கூறி கட்டபொம்மன் ஊமைத்துரையுடன் வீரர்களிடம் சரணடைகின்றனர்.

**முடிவுரை:**

- மாங்கல்ய பிச்சை நாடகத்தில் கட்டபொம்மனின் தியாக மான்பையும், ஊமைத்துறையின் வீரத்தையும், அரசியின் பதிபக்தியையும், கருணாகர தொண்டைமானின் சதிசெயலையும் அரிய முடிகிறது.
- கொடுத்த வாக்கிற்காக கைதான இரு வீரர்களின் வீர வரலாற்றைப் பற்றி நாம் அறிய முடிகிறது.

13. **சிறு இசை கதையின் நாயகி மூக்கம்மா ஆச்சியின் பாத்திரப் படைப்பை விவரி.(5)**

**முன்னுரை:**

'சிறு இசை' என்ற சிறுகதையை எழுதியவர் வண்ணதாசன் இவர் திருநெல்வேலியில் பிறந்தவர். தமிழறிஞரும் சாகித்திய அகாதமி விருதும் பெற்ற தி.க. சிவசங்கரனின் மகனாவார். நவீன தமிழ்ச் சிறுகதை உலகில் மிகுந்த கவனம் பெற்ற எழுத்தாளராக விளங்குபவர். ஒரு சிறு இசை என்ற சிறுகதை நூலுக்காக சாகித்திய அகாதெமி விருது பெற்றவர்.

***மூக்கம்மா ஆச்சி:***

- மூக்கம்மா ஆச்சிக்கு பதினாறு வயது முடியும் முன்னமே திருமணம் ஆகிவிட்டது. திருமணம் முடிந்த ஒரு மாதத்தில் கணவன் இறந்து போய்விட்டார். மூக்கம்மா ஆச்சிக்கு கதை சொல்வது மிகவும் பிடிக்கும். இருட்டுக்கும் அவருடைய கதைகளுக்கும் ஒரு நெருக்கம் இருந்து கொண்டே இருக்கும். பகலில் அவள் கதை சொன்னதே இல்லை.
- சாயுங்காலம் அவளைக் கதை சொல்லச் சொன்னால் கருகருத்த நேரத்தில் கதை சொல்லக் கூடாது 'ராட்ஸசன் பிடிப்பான்' எனக் கூறுவார். அவரிடம் பல ராஜா கதைகள் பல உண்டு.
- எந்நேரமும் அவர்கள் குதிரையில் வேட்டையாடிக் கொண்டே இருப்பார்கள். ராஜாக்கள் ஏழு பெண்ணை திருமணம் செய்து கொண்டனர் என தன் கற்பனைக் கேற்ப புராணக் கதைகளையும் ராஜா கதையினையும் இணைத்து கதை சொல்லும் பாங்கு ரசிக்க தக்கதாய் இருக்கும்.

***ஆச்சியின் யானை கதை:***

- ஒரு நாள் இரவு ஆடிச் செவ்வாய் அவ்வையார் விரதக் கொழுக்கட்டை செய்துவைத்து இருந்தாள். அக்கொழுக்கட்டை வாசம் பிடித்து ஒரு கொம்பன் யானை வந்தது. பாட்டி ஆண்களுக்கு கொழுக்கட்டை கொடுக்கக் கூடாதேன்னு யானையிடம் பொய் கூறினாள்.
- கொழுக்கட்டை எல்லாம் தீர்ந்து போய்விட்டது என சத்தியம் செய்தார்.யானையும் சத்தியத்துக்கு கட்டுப்பட்டு திரும்பி சென்று விட்டது.

- மறுநாள் காலையில் எழுந்திருச்சு பார்த்தா பாட்டிக்கு ஒரு பல்லு கூட இல்லாம உதிர்ந்து விட்டதாக பாட்டி கூறினாள். யானைகிட்ட பொய் சொன்னதால் தான் பல் எல்லாம் விழுந்து விட்டதாக சிரிக்காமல் நம்பும் படியாக கதை சொல்லுவதில் மூக்கம்மா ஆச்சி தேர்ச்சி பெற்றவள்.

***<u>மூக்கம்மா ஆச்சியின் வேலை செய்யும் திறன்.</u>***

- மூக்கம்மா ஆச்சி அவர் மகள் வீட்டுக்கு வரும் போதெல்லாம் ஏதாவது ஒரு வேலையை இழுத்து போட்டுக் கொண்டு செய்வாள். பத்து பக்கா பச்சரிசியையும் ஒரே ஆளாக இடித்து வைப்பாள்.
- எத்தனை கோட்டை நெல்லையும் ஒரு ஆளாக வெந்து தட்டுவாள். ஊரில் இருந்து கொண்டு வந்த காணத்தை மண் சட்டியில் மணம் வரும் வரை வறுத்து வைப்பாள். பரணில் இருக்கும் வெங்கலப் பாத்திரங்களை எல்லாம் வாய்க்காலுக்கு கொண்டு போய் விலக்கி எடுத்து வைப்பாள். புளிச்சிப்பத்தை ஓலைப் பாயில் காய வைத்து கொட்டை எடுப்பாள். இவ்வாறு ஆச்சி ஓயாது வேலைகள் பார்த்துக் கொண்டே இருப்பாள்.

***<u>ஆச்சியின் மரணம்:</u>***

- மூக்கம்மா ஆச்சி சிறுவயதிலேயே கணவனை இழந்தாலும் வாழ்க்கையில் தனக்கென ஒரு பிடிப்பினை வைத்துக் கொண்டார். அவர் மனத்தில் உள்ளே ஆழத்தில் ஒரு பெண்ணாக அவள் அனுபவிக்காத வாழ்க்கையின் ஏக்கம் இருந்து கொண்டே இருந்தது.
- அக்கவலையை அவள் தன் கதை கூறும் பாங்கின் மூலம் சிறிதளவு தீர்த்துக் கொண்டாள். தன் தங்கை பேத்திகளோடு உரையாடுவதிலும் வேலைகள் செய்வதிலும் தன் வாழ்க்கையை பூரணமாக்கி கொண்டவள்.
- அவள் இறந்தபின் அவள் பெட்டியைத் திறந்தபோது அதில், சொத்து பத்திரங்கள், சில பட்டுச் சேலைகள், பட்டு நேரியல், ஆச்சியின் புகைப்படம், தாத்தா பயன்படுத்திய மூன்று தங்க பொத்தான்கள் மற்றும் தாத்தாவின் சந்தனக்கலர் சட்டையும் இருந்தது.
  இவற்றிலிருந்து அவள் வாழ்வின் ஏக்கங்கள் ஒரு சிறு இசையாய் வெளி வந்தன.

<u>முடிவுரை:</u>

ஒரு பெண் சிறுவயதிலேயே தன்வாழ்க்கையை தொலைத்து விடுகிறாள். ஆனால் அவள் முதுமை வரை அவள்வாழ்க்கை தன் ஆசைகளை அடக்கிக் கொண்டு வாழ்கிறாள். யாருக்கும் தெரியாமல் அவளுக்குள்ளும் ஒரு இசை போல் மெல்லிய தாய் ஆசைகளும் ஏக்கங்களும் மறைந்து இருப்பதை இச்சிறுகதையின் மூலம் ஆசிரியர் உண்ர்த்துகிறார்.

14. <u>வல்லினம் மிகும் இடம் என்றால் என்ன? சான்று தந்து விள்குக.</u>

(1) இயல்பாக உயிரை இறுதியாகக் கொண்டு நிற்கின்ற சொற்களின் முன் க், ச், த், ப் மிகும்.
சுட்டி + பையன் = சுட்டிப்பையன்
தட்டி + பார்த்தான் = தட்டிப்பார்த்தான்

(2) ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், ஈறுகெட்ட எதிர்மறை வினை எச்சம் முன் வல்லினம் மிகும்.
உண்ணா + குதிரை = உண்ணாக்குதிரை
சொல்லா + பையன் = சொல்லாப்பையன்
உண்ணா + கிடந்தன = உண்ணாக்கிடந்தன
செல்லா + கிடந்தன = செல்லாக் கிடந்தன

(3) அன்றி, இன்றி எனும் குறிப்பு வினையெச்சங்களின் முன் வல்லினம் மிகும்.
அன்றி + போகான் = அன்றிப்போகான்
இன்றி + செல்லான் = இன்றிச்செல்லான்

(4) குறிலும், நெடிலும் இணைந்து நிற்கும் சொற்களின் முன்வரும் வல்லினம் மிகும்.
பலா + கனி = பலாக்கனி
நிலா + கற்றை = நிலாக்கற்றை

(5) அகர ஈற்று வினையெச்சங்கள் அதாவது என, ஆக, விடஎன்னும் உயிரெழுத்து முன் வல்லினம் மிகும்.

உண்டென + சொன்னான் = உண்டெனச் சொன்னான்

வருவதாக + கூறினான் = வருவதாகக் கூறினான்

இராமனைவிட + பெரியவன் = இராமனைவிடப் பெரியவன்

(6) அ, இ, உ எனும் சுட்டெழுத்துளின் முன்னும், எ எனும் வினா எழுத்தும் முன்னும் வல்லினம் மிகும்.

சுட்டு: அ + குடிகை = அக்குடிகை

இ + சங்கு = இச்சங்கு

உ + பக்கம் = உப்பக்கம்

வினா: எ + தட்டு = எத்தட்டு

(7) இரண்டாம் வேற்றுமை விரி நான்காம் வேற்றுமை விரி - இவற்றைத் தொடர்ந்து வரும் வல்லினம் மிகும்.

2 - ஆம் வேற்றுமை விரி : வாளை + தடுத்தான் = வாளைத்தடுத்தான்

4 - ஆம் வேற்றுமை விரி : கந்தனுக்கு + பிடித்தது = கந்தனுக்குப் பிடித்தது

(8) இரண்டாம், மூன்றாம், நான் காம், ஐந்தாம் வேற்றுமை - உருபும் பயனும் உடன் தொடக்க தொகையின் பின்வரும் வல்லினம் மிகும்.

நீர் + குடம் = நீர்க்குடம் (நீரை உடைய குடம்)

துணி + பை = துணிப்பை (துணியினால் ஆன பை)

கோழி + தீவனம் = கோழித்தீவனம் (கோழிக்கு உரிய தீவனம்)

விழி + புனல் = விழிப்புனல் (விழியின் நீங்கிய புனல்)

(9) ஆறாம், ஏழாம் வேற்றுமைத் தொகைகளின் பின்வரும் வல்லினம் மிகும்.

குருவி + கூடு = குருவிக்கூடு (குருவியது கூடு)

நரி + பல் = நரிப்பல் (நரியினது பல்)

ஊர் + பெண்டிர் - ஊர்ப் பெண்டிர் (ஊரின் கண்ணுள்ள பெண்டிர்)

மலை + குகை - மலைக்குகை (மலையின் கண்ணுள்ள குகை)

(10) பண்புத்தொகை, இருபெயரொட்டுப் பண்புத்தொகை, உவமைத் தொகை இவற்றைத் தொடர்ந்து வரும் வல்லினம் மிகும்.

பண்புத்தொகை:

தீமை + திங்கள் = ஆடித்திங்கள்

பொய் + சான்று = பொய்ச்சான்று

இருபெயரொட்டுப் பண்புத்தொகை:

ஆடி + திங்கள் = ஆடித்திங்கள்

உழவு + தொழில் = உழவுத்தொழில்

(11) ஓரெழுத்து ஒரு மொழியின் முன் வல்லினம் மிகும்

கை + பிள்ளை = கைப்பிள்ளை

தீ + பொறி = தீப்பொறி

பூ + தொட்டி = பூத்தொட்டி

(12) சில இடை, உரிச்சொற்களின் முன் வல்லினம் மிகும்

இனி + செல்வோம் = இனிச்செல்வோம்

சால + சிறந்தது = சாலச்சிறந்தது

தவ + கோலம் = தவக்கோலம்

15. <u>வல்லினம் மிகா இடங்கள்</u>

1) சில, பல, கெட்ட, நல்ல எனும் சொற்களின் முன் வல்லினம் மிகாது.

சில + பறவை = சில பறவை

பல + பாடம் = பல பாடம்
நல்ல + பிள்ளை = நல்ல பிள்ளை

2) பெயரெச்சத்தின் முன்வரும் வல்லினம் மிகாது.
அரிய + செல்வம் = அரிய செல்வம்
புதிய + படைப்பு = புதிய படைப்பு

3) எழுவாய்த் தொடர், விளித்தொடர்களின் முன்வரும் வல்லினம் மிகாது.
யானை + பெரியது = யானை பெரியது (எழுவாய்)
தம்பீ + போ = தம்பீபோ (விளி)

4) வினாச் சொற்களின் முன்வரும் வல்லினம் மிகாது.
நீயா + செய்தாய் = நீயா செய்தாய் (ஆ)
அவனோ + கண்டான் = அவனோ கண்டான் (ஓ)

5) படி என முடியும் சொற்களின் முன்வரும் வல்லினம் மிகாது.
கேட்கும்படி + சொன்னார் = கேட்கும்படி சொன்னார்
தரும்படி + கேட்டான் = தரும்படி கேட்டான்.

6) இத்தனை, அத்தனை, எத்தனை எனும் சொற்களின் முன் வரும் வல்லினம் மிகாது
இத்தனை + பழங்கள் = இத்தனை பழங்கள்
அத்தனை + பூக்கள் = அத்தனை பூக்கள்
எத்தனை + செடிகள் = எத்தனை செடிகள்

7) எட்டு, பத்து தவிர்த்து பிற எண்களின் முன் வல்லினம் மிகாது.
இரண்டு + கண்கள் = இரண்டு கண்கள்
மூன்று + கைகள் = மூன்று கைகள்
நான்கு + தேர் = நான்கு தேர்
ஐந்து + குதிரைகள் = ஐந்து குதிரைகள்
ஆறு + தொட்டி = ஆறு தொட்டி
ஏழு + தோப்புகள் = ஏழு தோப்புகள்
ஒன்பது + பேர்கள் = ஒன்பது பேர்கள்

8) அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி ஆகியவற்றில் வல்லினம் மிகாது.
தீ + தீ = தீதீ
மள + மள + மளமள

9) இரு வடசொற்கள் இணையும்போது வல்லினம் மிகாது.
புஷ்ப + தேர் = புஷ்பதேர்

10) ஆறாம் வேற்றுமை தொகையில் சில இடங்களில் வல்லினம் மிகாது.
கம்பர் + செல்வாக்கு = கம்பர் செல்வாக்கு.

16. <u>வளையாத பனையில் இராயப்பனின் பண்புகளை விவரிக்க.</u>

- இராயப்பன் பனை ஏறும் தொழிலாளி. சிறு வயதில் இருந்தே ஏறி வருகிறார். ஓவுல் ரெட்டியார் மகன் சுப்புக்குட்டிக்கு பாத்தியப்பட்ட புஞ்சை இது. இதில் 250 பனைகளுக்கு மேல் இருக்கும்.

***<u>பனை ஏறும் தொழில்:</u>***

- இராயப்பன் சிறுவயதிலிருந்தே பனை ஏறும் தொழில் செய்பவன். இவன் நாடாறுமாதம் காடாறு மாதம் என்பது போல் பதனீர் சமயத்தில் தோப்பிலும் மற்ற வெள்ளாமைக் காலத்தில் ஊரிலுமாக வாழ்ந்து வருபவன்.
- ராயப்பனின் மனைவி அவனுக்கு துணையாக பனைவெல்லம் காய்ச்சும் பனியில் ஈடுபட்டு வந்தாள்.

***<u>இராயப்பனின் பண்பு:</u>***

- இராயப்பன் யாரிடமும் சண்டையிட மாட்டான். சுப்புக்குட்டியின் மகன் சுரேஷ் தன் நண்பர்களுடன் வந்து பதனீர் குடித்து விட்டு செல்வான்.

- சுரேஷ் ராயப்பனை நோக்கி, 'நல்ல பனையாய் பார்த்து ஏறும்' எனக் கேலியாகப் பேசுவான். ஆனால் இராயப்பனுக்கு கோபமே வராது. ஒருமுறை சுரேஷ் தனிப்பதனீர் கேட்டு பிடிவாதம் பிடித்தான்.
- 'நாங்களும் தனிப் பதனீர் கேட்டு உம்மட்ட தொங்கோ தொங்கறோம் அத காதிலே போட்டுக்க மாட்டீரு. எல்லாம் எங்க பனைக. இதிலே உமக்கு என்ன கஷ்டம் எனக் கேட்டான்'.
- இராயப்பன், இதுவரைக்கும் இந்தக் காட்டிலே எந்த பனையிலேயும் தனிப் பதனிக்கு கலயம் கட்டியதில்லை. என் தொழிலுக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன் எனக் கூறிவிட்டான்.
- ஆனால் இராயப்பன், இதுவரைக்கும் இந்தக் காட்டிலே எந்த பனையிலேயும் தனிப் பதனிக்கு கலயம் கட்டியதில்லை. என் தொழிலுக்கு நான் துரோகம் செய்ய மாட்டேன் எனக் கூறிவிட்டான்.

***<u>மனதிடம்:</u>***

- சுரேஷ் தனக்கு இராயப்பன் தனிப்பதநீர் குடுக்க மறுத்ததை தன் தந்தை சுப்புக்குட்டியிடம் கூறினான். சுப்புகுட்டி வந்து இராயப்பனிடம் தனிப்பதனீர் குடுக்காவிடில் நீ வேறு காட்டிற்கு சென்று விடு என மிரட்டினார்.
- அப்போது கூட இராயப்பன் தன் நிலையில் இருந்து மாறாமல் தனிப்பதநீர் இறக்கித் தர முடியாது எனமனத்திடத்துடன் சொன்னான்.
- இராயப்பன் தன் தொழிலில் தனக்கென வாழ்ந்து வந்த தர்மத்தை யாருக்காகவும் விட்டுக் கொடுக்காம வளையாத பனை போல மனோதிடம் கொண்டவனாக வாழ்ந்து வந்தான்.

17. <u>சங்கமுனி பெற்ற சாபத்தை பற்றி சாபவிமோசனம் பற்றி கட்டுரை வரைக.</u> (10)

சீர்த்த மலை என்னும் இடத்தில் சங்க முனி என்பவர் தன் சீடர்கள் புடை சூழ தவம் புரிய இடத்தை தேடுகின்றனர். அப்போது சுகந்த மணம் வீசும் சோலையை தவம் புரிய ஏற்ற இடமாக தேர்வு செய்கின்றனர். குருவான சங்கமுனியும் 12 ஆண்டுகள் கடுந்தவம் புரிகின்றார்.

***<u>சீடர்களின் தொண்டு</u>***

- 12 ஆண்டுகள் கடுமையான தவம் முடிந்து கண் விழிக்க இருக்கின்ற குருநாதருக்காக சீடர்கள் தர்ப்பைப் புற்கள், கள்ளிகள், மலர்கள் பறிக்கின்றனர். ஓமகுண்டத்தை தயார் படுத்தி வைக்கின்றனர்.

***<u>முனிவர் கண்திறத்தல்</u>***

- மாமுனிவர் கண் திறந்தால் மாணவர்களாகிய சீடர்கள் உயரடைவார்கள். பன்னிரண்டாண்டுகளாய்ப் பக்தியின் ஒளிப் பெருக்கில் மூழ்கிப் திளைந்து தனிமையில் வேத நெறிப்படி யோக நெறி நின்றார் முனிவர்.
- சங்க முனி தவம் முடிந்து கண் திறக்கின்றார். தவத்தின் சாரத்தை என் ஞானத்தை உங்களுக்கு பகிர்ந்தளிப்பேன் என்கிறார்.

***<u>முனிவர்களின் அறிவுரை</u>***

- சீடர்கள் அறிவுரை வழங்குமாறு கேட்க, முனிவரும் எழுந்து நின்று, சிந்தையை ஒன்றினில் அடக்கி, அந்த ஞானவெளியில் நாம் கலந்திருக்கும் தவம் உன்னதமானது. ஞானிகளால் மட்டுமே அடையக் கூடியது.
- இது நீங்கிய சாதாரண வாழ்க்கை பன்றித் தொழுவத்திற்கு ஒப்பானது. நாம் பன்றிகள் அல்ல, ஞானிகள்! மனவொளியில் பேரருளைப் பூஜிக்கும் தவமே நம்மை ஞானிகளாகக் காட்டும் எனச் சங்கமுனி தவம் கலைந்து அருளுரை வழங்கினார்.

***<u>கனியின் வரலாறு</u>***

துங்க முனியின் பத்தினி தேவந்திகை தன் கணவன் மேல் கொண்ட சிற்றின்ப ஆசையில் கோயில் பூசாரியிடம் வேண்டி ஒரு கனியைப் பெறுகிறாள். தனக்கு பிள்ளை வரம் வேண்டி அக்கனியை வரமாகப் பெற்று விட்டாள். ஆற்றில் குளிக்கும் போது கரையில் அக்கனியை வைத்து விட்டு செல்கிறாள். இதை அறியாத சங்க முனியின் சீடர்கள் அக்கனியை தெய்வக்கனி என்றெண்னி குருவிடம் உண்ணக் கொடுத்தனர்.

*<u>சங்க முனியின் சிற்றின்பம்</u>*

தெய்வக் கனியை உண்ட சங்க முனி சிற்றின்ப ஆசையால் பெண்ணே பேரின்பம் எனக் கூறி தேவந்திகையின் பின்னால் செல்கிறார். அப்போது தேவந்திகை நான் மாற்றான் மனைவி, மாமுனியின் பத்தினி. ஏதோ குழப்பம் நிகழ்ந்து விட்டது என அடைக்கலம் தேடி துங்க முனியிடம் செல்கிறாள்.

*<u>துங்க முனியின் சாபம்</u>*

தன் மனைவி மேல் தாபம் கொண்டு ஓடி வரும் சங்க முனியை தடுக்கிறார். கோபம் கொண்டு சங்க முனிக்கு, "தவவேடம் பூண்ட பதரே, கீழான இச்சை கொண்டு தவ வாழ்வில் சேறு பூசிய மூடனே நாளை சூரியோதத்தில் எல்லோரும் காணும்படி பன்றியாக நீ போகக் கடவாய்" எனச் சாபம் அளிக்கிறார்.

*<u>சாப விமோசனம்</u>*

- சங்க முனிவரின் சாபம் நீங்க சீடர்கள் துங்க முனியிடம் எங்களால் தான் இத்தவறு நேர்ந்தது, நாங்கள் கொடுத்த கனியை உண்ட பின்னே குரு நாதர் இவ்வாறு மாறினார் என குருபக்தி மேலிட பேசினர்.
- இதை அறிந்த துங்க முனியும் சாப விமோசனம் அளித்தார். இனி வரும் பௌர்ணமி நாளில் பன்றி உருவில் இருக்கும் உங்கள் குருவின் தலையை வெட்டினால் சாபம் நீங்கிவிடும். உங்கள் குரு சாப விமோசனம் பெறுவார் என்றார்.

*<u>சங்க முனி பன்றியோடு வாழ்தல்</u>*

- சங்க முனி பன்றியாய் மாறிவிட்ட பின் தன் சீடர் கூட்டத்திலிருந்து தப்பித்து பன்றிகளோடு சென்று விடுகிறார். மெது மெதுவாக பன்றி முனி எல்லாப் பன்றிகளைப் போலவே மாறி விடுகிறார்.

*<u>சாப விமோசனம்</u>*

- பௌர்ணமி நாளன்று பன்றி முனியைத் தேடி அலைகின்றனர் சீடர்கள். முடிவில் முனிவரை காண்கின்றனர்.
- அவரிடம் பேசி அவருக்கு சாப விமோசனம் அளிக்க, பன்றி முனியின் சிரத்தை வெட்ட பலி ஆட்டை அழைத்து வருவது போல் பூசைகள் செய்து அழைத்து வருகின்றனர்.
- வெட்ட வரும் சமயம் பன்றி முனி பன்றிகள் சப்தம் கேட்டு ஓடுகிறார். பன்றி உரு ஒழிந்து மீண்டும் குருவாகத் திரும்புவதாகக் கற்பனை செய்கிறார், குழம்புகிறார்.
- சீடன் தயாபரனைப் பார்த்து வெட்டுவதை நிறுத்து என்கிறார்.

*<u>பன்றி முனியின் மாற்றம்</u>*

- மற்ற பன்றிகள் சீடர்களைப் பார்த்து உங்கள் குருநாதர் உங்களிடம் வரமாட்டார் எனக் கூறுகின்றன. குருநாதரே நீங்கள் சொல்லுங்கள் எனக் கேட்டபோது பன்றிகள் பொய் சொல்லுவதில்லை.
- இப்பன்றி வாழ்க்கை தந்த சுகம் கொஞ்சமா? இந்த வகை வாழ்க்கை பிடித்த விதம் சொல்லவும் முடியாது எனக் கூறி பன்றிகளோடு செல்கிறார்.

*<u>சாபமே வரமாகிறது</u>*

- உயர்ந்த ஸ்தானம் என்று தான் கருதுகின்ற இடத்திலிருந்து சந்தர்ப்ப வசத்தால் தன் கருத்தின் கீழான நிலைக்கு தள்ளப்பட்டாலும் தொடக்கத்தில் அதை ஏற்க மறுக்கிற மனசு பின் அதோடு சமரசம் செய்து கொண்டு அந்த இடத்தை சொர்க்கமாக நினைக்கின்றன.
- சங்க முனியும் தான் பெற்ற சாபத்தை வரமாக மாற்றிக் கொண்டதால் தான் சாப விமோசனத்தை அவர் ஏற்கவில்லை.
- சங்க முனிவர் பன்றி வாழ்க்கையுடன் சமரசமாகிப் பழகி கொண்டார்.

**18. உறுதி வேண்டும் என பாரதியார் வேண்டுவன யாவை?**

- **நம்முடைய மனமானது உறுதியுடனும், தெளிவுடனும் இருத்தல் வேண்டும்,. நாம் பேசக்கூடிய சொற்கள் பிறரைப் புண்படுத்தாமல் இனிமை நிறைந்த நல்ல சொற்களாக இருத்தல் வேண்டும்.**
- **நாம் எண்ணக்கூடிய எண்ணங்கள் நல்ல எண்ணங்களாக நேர்மைக் குணம் மிக்கனவாக இருத்தல் வேண்டும். நாம் விரும்பிய பொருட்கள் நமக்குக் கிடைக்கப் பெறல் நன்மையைத் தரும்.**
- **நாம் காணக்கூடிய கனவுகள் உண்மையாக வேண்டும். கைவசமாகக் கூடிய நற்செயல்களை நாம் உடனே செய்து முடித்து வெற்றிபெற வேண்டும்.**
- **நம்முடைய வாழ்க்கையைச் சிறப்பாக நடத்துவதற்குத் தேவையான செல்வம் நம்க்குக் கிடைக்கப் பெறல் வேண்டும்.**
- **இன்பமான வாழ்க்கை வாழ நாம் முயற்சிக்க வேண்டும். இவ்வுலகில் பிறந்தோம்; வாழ்ந்தோம்; மறைந்தோம் என்றில்லாமல் பெருமைமிக்க வாழ்வை நாம் வாழ வேண்டும்.**
- **நம்முடைய வாழ்வில் விழிப்புணர்வுடன் நாம் கண்திறந்து வாழ வேண்டும்.**
- **நாம் செய்யக்கூடிய செயல்கள் யாவும் உறுதி நிறைந்ததாக இருத்தல் வேண்டும். பெண்களின் வாழ்வில் விடுதலை ஏற்படல் வேண்டும்.**
- **பெண்ணிற்கு உரிமை கிடைத்து மேன்மைமிக்க வாழ்வை அவர்கள் வாழ வேண்டும். பெரிய கடவுள் நம்மைக் காத்தருள வேண்டும்.**
- **இந்த மண்ணுலகம் பயன்பெறும்விதத்தில் நம்முடைய வாழ்வு அமைதல் வேண்டும்.**
- **வானத்தை எட்டும்படியான உயரிய வாழ்வைப் பெற்று நாம் உயர்வடைய வேண்டும். உண்மை மட்டுமே வெற்றி பெற வேண்டும்.**

| | | | |
|---|---|---|---|
| 1. | பாரதியார் | - | 1. உறுதிவேண்டும், 2. புதுமைப்பெண் |
| 2. | பாரதிதாசன் | - | புரட்சிக்கவி "பேரன்பு கொண்டவரே" என்ற பாடல் முதல் "கவிஞனுக்கும் காதலிக்கும்" என்ற பாடல் வரை. |
| 3. | கவிமணி | - | ஆசியஜோதி - புத்தரும் ஏழைச் சிறுவனும் |
| 4. | கண்ணதாசன் | - | நீ மணி, நான் ஒலி! |
| 5. | கவிஞர் அறிவுமதி | - | நட்புக் காலம் |
| 6. | வைரமுத்து | - | தமிழுக்கு நிறமுண்டு கூடு |
| 7. | மு. மேத்தா | - | வாழை மரத்தின் சபதம் |
| 8. | செ. அன்னகாமு | - | நாட்டுப்புறப் பாடல்கள் - தாலாட்டு, ஒப்பாரி |
| 9. | அப்துல் ரகுமான் | - | கனவு நாயகன் - அப்துல் கலாம் |

1. உள்ளுணர்வு கனவாக வெளிப்படுகிறது - எம்.எஸ். உதயமூர்த்தி
2. வீழ்ந்த ஆலமரம் - கல்கி
3. ஏழாவது அறிவு (போரின்றி வெற்றி மட்டும்) - வெ. இறையன்பு

1. மாங்கல்யப் பிச்சை - டி.என். சுகி. சுப்பிரமணியம்
2. சாபம் விமோசனம் - மு. இராமசாமி

1. வளையாத பனைகள் - இரா. நந்தகோபால்
2. ஒரு சிறு இசை - வண்ணதாசன்